௧௦௦. என்புதல்வர் - வினைத்தொகை. கதியைமறந்தவர் தன்னைக்கண்டமாத் திரத்தே அச்சிந்தையுடையராய் நினைந்து அக்கதிபெறத் தோன்றிடும் என்க. நினைந் தென்பது நினைக்கமுத்திதருதலைக் குறித் து நின்றது.

சோணசைலமாலைக்குறிப்புரை முற்றிற்று.

# நால்வர் நான்மணிமாலைக்குறிப்புரை.

## காப்பு.

எப்போதகத்தும் - எக்காலத்தின்கண்ணும். உள் ஏழாம்வேற்றுமையிடப் பொருளுருபு. இதயகமலமுமாம்; இதற்கு அகப்போது என மாறுக. எவ்வகை மனமாயினும் அதனால் நினைக்கின் இடரில்லையென்க. எப்போதும் அகத்து என்னலுமாம்.

௧. பொய்கை - பிரமதீர்த்தம். ஞானப்பாலுண்டு அதனைத் தாம்மொழிந்த இயற்பாவோடு சேர்த்து எமது செவிக்கமுதமாய் வார்த்தபிரான் என்க; ஆன் "தூங்குகையானோங்குநடைய" என்புழிப்போல ஒடுவுருபின் பொருளது. இயற்பாவான் மொழிதல் - இயற்பாவாற் றுதிக்கப்படுதலுமாம். உண்டு மறித்து அமுதாக இயற்பாவால் வார்த்தபிரான் என்னலுமாம். ஆக்கம் உவமம்.

௨. வாயில் - ஏது. நல்கினும் பாட்டில் எவ்விதத்தாலும் நீயும் அவனும் ஒப்பீராகலின் இங்ஙனம் ஈந்தமையாற் பயன் என் என்பது. நாட்டிற்கிலாத எனல் தாப்பிசை.

௩. படி - ஒப்பு. வான் - வானுலகத்தவர். பரமன் விருப்பனென்பது விளங்குமாறு அறிந்தனனென்க. அறிந்தனனென்பது பிரதிக்ஞை, கொண்டும் சென்றும் இட்டும் உழன்றமையாலென்பது ஏது.

௪. வேதம் பல்காலோதினும் சிற்றன்புடையராதலும் அரிதென்பதூஉம் திருவாசகமொருகாலோதினும் பேரன்புடையராதல் எளிதென்பதூஉம் விளக்கியவாறு. மன்பதை - மக்கட்பரப்பு. மற்றையர் - ஈண்டு அன்பராகார்.

௫. நிலைவிளம்பவென்பது சோணாட்டந்தணரொருவரெய்தி உரைத்தமையைச்சுட்டிநின்றது. இதனைத் திருவிளையாடற்புராணத்தாலும், கேட்குங்கால் மங்கையர்க்கரசியார்க்குக் கொங்கைசுரந்தமையைச் "சுரந்த திருமுலைக்கே" என்னும் திருக்களிற்றுப்படியார்த் திருப்பாடலானும் தெளிக.

௬. வேந்த ! ஆரூரன் அப்பூதியை ஏத்துமியல்பறிந்தும் நின்பொருட்டு எனக்கு அன்பெய்தாதது என்னெனக்கூட்டுக. ஏத்துமியல்பு - "ஒருநம்பி யப்பூதி யடியார்க்குமடியேன்" எனத்துதித்த மேம்பாடு.

௭. இருந்து என்பது இயற்கையறிவு சொரூபராகலின் தமக்கிணையொத்தாரை நேடியிருந்தென்பதும், நினையென்பது நெற்றிக்கண்படைத்தவரே தோழமை கொள்வாராயின் நின்பெருமை புகலவெளிதோவென்பதும் தோன்றநின்றன.

௮. வாச்சியம் - வாசகத்தாலுணர்த்தப்படும் பொருள். அல்குல்வேய்த்தோள் அன்மொழித்தொகை. இடம் இடப்பாகம், தவன் - யோகி; கணவனுமாம்.

௯. மால் என்புதந்து கொம்பு ஆக்கிக் கொண்டிலன் என் என்க. பந்தாமென்னு முலைக்கொம்பு ஆக்கிக்கொண்டிலன் என்கும் எனக்கண்ணழித்து, சிவநேசச்செட்டியார்போல என்பைப் பந்துபோலுமென்னும் தனங்களையுடைய பெண்ணாக ஆக்கிக் கொண்டிலனென்பர் திருமால் எனவுமொன்று. என்கும் - ஈண்டுச் செய்யுமென்முற்று. சுட்டினுடுகாட்டுமென்பதனால் அது தடத்தவடிவம் என்பது பெற்றும்.

௧௦. அதுவென்றது படிக்காசொன்று பெறுதலை. குழை - காது. என்வாங்கினையென்பது இறைவராஞ்ஞையை மறுத்தற்கஞ்சியோ என்பதுபடநின்றது.

௧௧. வாங்குசிலையென்பது குறிப்பால் இந்திரதனுசை யுணர்த்திற்று; உடம்பு நிலையாமைக்குவமிப்பது அதுவேயாகலின். அன்றிக் கூனுங்கால் வளைந்தவில்லை நிகர்க்குமுடலெனவுமொன்று. தீங்கின்

மை - அழியாமை. ஆதிதிரோதாயியென்னுமெனவே அந்தத்தில் அதுவே அருட்சத்தியெனப்படுமென்றாராயிற்று. கூற்றுவனுமுமிழ்வித்தென்க. ஓடு கலப்புறு பொருட்கண்வந்தது. இங்ஙனமியற்றின் எவருமுய்வரென்றபடி.

கஉ. சுருதிநாயகற்குத் தொண்டராயினரெனவும், மகிழ்வோனே கொண்டனனெனவும் இயையும். மாறு - பிரம்பு.

கஈ. மகிழ்ச்சிமிகவுண்டென்றதுபாடிய திருநெறித்தமிழினருமையையும் தேவியாரளித்த ஞானப்பால் அதற்கேதுவாதலையும் குறித்தென்க. போலும் - ஒப்பில் போலி. சந்தை - பலபண்டமுங்கொள்வான் குழுமும் சனத்தொகுதி; வேதச்சந்தையுமாம். மலரில் இரையும் என்க.

கச. உயிர்முற்றும் சூக்குமவாலயமும் அவற்றினுடலனைத்தும் தூலவாலயமுமாகக் கூறுவது நூற்றுணிபு. முன் - அநாதியே. உம்மை உயர்வுசிறப்பு; எச்சமுமாம். மன் திறத்தல் - பின் வாதியாதொழித்தல். வழிபாடுடையார்க்குப் புரியுமாறுவகுத்தது.

கரு. நுதல் நோக்கு உறுவோன் எனக் கண்ணழித்து, சுருத்தின் குறிப்பைக் கண்டறிந்தகடவுள் என்க. நுதலல் - கருதல். கண்படைத்தநெற்றியோன் எனலும் ஒன்று. பகவு - பிளப்பு. சிவாபராதரைத் தண்டிக்க; அஃதியலாதேல் தம்முயிர் துறக்க; என்பது குறித்தோவென்பார் எதுக்கென்றார். காக்கவென்பதன் அகரந்தொக்கது. மதலையைக்காண்றிட எனக் கொள்க.

கசு. மழை - மேகம். குளம் - ஏரி. புகத் தருமென இயையும். ஊன்றிய அன்பு - முன்னரேபதிந்துள்ள அன்பு.

கஎ. பயன் - பழம். ஆண்பனையினன்மையாவது - பிள்ளையாரால் முத்திபெறற்குரிய முதுதவமுடைமை. பாட்டின்வினைவைப் பாட்டுவினைவாகவுபசரித்தார்.

கஅ. ஊட்டா பூட்டாவென்பன வினையெச்சம். பிந்திய மகிழ் வினைத்தொகை. தேகாதிப்பிரபஞ்சத்தைச் சிறிதுங்குறிக்கொள்ளானென்பார் வேட்டவன் கடற்கே போதுவன் என்றார். வேட்டால் போதுவேன் என்றலுமாம். இங்ஙனமியற்றியேனும் இவரருள் பெறவேண்டுமென்பது.

ககூ. கன்னிகையாக்குதற்கு என்பும், மிதத்தற்குக் கல்லும்போல ஆதாரமின்றாகவும் பாடலொன்றால் அஃதுளதாக்கியழைத்தமையின் அதனருமைதோன்ற யாதரிதென்றார். இதனைக் கந்தபுராணம் கடவுள்வாழ்த்து உஉ-வது செய்யுளானுமுணர்க. ஓகாரமூன்றும் வினாப்பொருளவேனும் இறுதியது பிரிநிலையுமாம்.

உ0. அடியார்மெய்யன்பு - அடியர்பாற்கொள்ளும் மெய்யன்பு. வித்தக, கொள்வோய், அருளல்வேண்டும் எனவியையும்.

உக. பிடர்பிடித்துத் தள்ளுதல்- அனுகாதகற்றலென்னும்பொருட்டாய் உலகவழக்குப்பற்றிவந்தது. ஏடேறப் பால்குறைந்ததென்பதும் அருகரென்பதும் இரட்டுறமொழிதல்.

உஉ. வினாப்பொருளவோகாரமிரண்டும் முறையே உயர்வினும் இழிவினும் வந்தன. பெருகென்புழி அகரம் உலகறிசுட்டு. அரிது சொல் என்க.

உஈ. காண்குற நலன் உறுமோவென இயையும். நலன் - சிவானுக்கிரகம். பாலலை-பாற்கடல்; ஆகுபெயர். தம்பிரான்-உபமன்னியமுனிவர்.

உச. தெய்வநாயகர் சுருதியாதிய கலைகளுள் ஒன்றானுந் துணியப்படாதவர்; அவர்கைகள் முத்தொழிற்கிணங்கத் துடியும் அபயமும் அனலமும் கோடலானும் ஒருகாற்கும்பிடிற் கதிகூடுமெனக் குஞ்சித பதத்தைக் குறித்தலானும் வனைவுற்றமர்வன; முறிந்தகைகள் என மற்றுமொரு பொருடோன்ற நின்றவாறுங் காண்க. சூரியசோமநேத்திரங்கள் உலகின் தோற்றநிலைகட்கேதுவாகிய பகலிரவுகளையும் அக்கினிநேத்திரம் அவ்வுலகிறுதியையும் தோற்றுவிப்பன; கண்கள் ஒருகாலைக்கொருகாலை குருடாவன என மற்றுமொருபொருடோன்றுதல்காண்க. இங்ஙனமிருந்தும் தலைமைநாடாதெய்திப் பழுதில்செய்யுளை உலகினர் ஓதியுணர்ந்துய்வான் வரைந்தனர்; இவ்வுட்கிடையுணரார்க்கு இச்செயலாற் புகழ்ச்சிவிருப்பர் போலினும், 'இகழ்ச்சியறியா என்பணிவானே' என்பதனால் அஃதிலர் என்பது தெரித்தவாறுகாண்க. முறி - தளிருமாம்.

உரு. தொடர்பு ஒன்று எடுதானும் அழல்வீழ்ந்து கரியாய்விடாமல் எழுந்து கரியாய் இதழியோன்சீர்மொழியும்எனக் கூட்டுக. தொடர்பு - திருப்பதிகம். சீர் - பரத்துவம். கரி - சான்று. எழுதல் - முன்னையினும் பசந்து விளக்கமடைதல்.

உசு. பூர்வம் வழிபட்டிருப்பரேல் மாநிலத்துதித்து மயங்கியுழலாராகலின் உழல்வாரெல்லாம் திருநாவுக்கரசினை வழிபடுதல் பெறுகிலரேயென்பது. வழிபடுதல் சொல்லெச்சம்; "பெற்றாற்பெறிற்பெறுவர்" என்னுந் திருக்குறளிற்போல. பட்டார் திருநாவுக்கரசினைப் பெறாதவரே ஆவர் எனலுமொன்று. வாய் - வினைத்தொகை. நச்சு உரகமென்க. நச்சுங்குலையுமாம்.

உஎ. வரதன்-வரத்லைதக்கொடுப்பவன். ஆற்றிடுபொன் குளத்துவரவும் செங்கற் செம்பொனாகவும் பாடும்பரிசை அறிந்துவைத்தலினன்றி இயற்றலின் ஆவலுடையனல்லேனென்பார் பரிசுசித்திக்கப்பகர்வாயென்னாது பரிசுபகர்வாயென்றார். பரிசு - அருட்டன்மை.

உஅ. நீ அழுங்கி உருகிநிற்பை, பேயேன் கவலைதீர்ந்தேன், ஆதலால், என்பது ஏது. பொருளின் தெளிவறிந்தேனென்பது பிரதிஞ்ஞை. செஞ்சொல் - திருக்குறள். தேற்றம் ஈறுகுறைந்தது.

உகூ. சில்பலி - சிறுபலி. ஆனேறிபெயர். பலிக்கென்றென்பது உள்ளபடி பலிக்குச்சென்றதன்றென்பதும், யாண்டுப் பெற்றானென்பது யாண்டும்பெற்றிலனென்பதும் படநின்றன - பெறுதல் அதன்காரியமாகிய ஈதலையுமுணர்த்திற்று. வெள்ளைபணி - ஆகுபெயர். அகரம் தலைமைச்சுட்டு. இது நிந்தாஸ்துதியாகவும் நிற்பதறிக.

ஙo. பெறின் உன்னைப்பெற்றவர்போல உன்னையொத்த புதல்வனைப் பெறுதலும், உதிப்பின் உன்னைப்போல ஒரு புதல்வனாகி யுதித்தலுமே சிறந்தன. என்பது. கண்டாய் - முன்னிலையசை.

ஙக. வான் அமுதம் பாவாகப்பொழிந்த நம்பியெனவும், தருமதேவதையைப் பொருதஞ்சேவாகவுடைய தேவன் எனவுங்கொள்க. வான்அமுதம் - பரமுத்தி; அது ஈண்டு அதன்—சாதனங்களின்மேற்று. காவாய்ப்பயந்த - கற்பகதருவைப்போல வேண்டிற்றுதவிய. மாவாய்ப்பிறக்கும் - இக்கலியுகமுடிவிற் குதிரையாயுதிக்கும்.

ஙஉ. நிகரில் ஆனந்தம் - சிவானந்தம். அறமென்றது அறப்பயனாகிய சுவர்க்காதிகளை.

ஙங. சிவிகைபரித்தார் இப்பொழுதுஞ் சிறந்த தேவராய்த் திரிகின்றாராகலான் "அறத்தாறிது" எனுந்திருக்குறளை மறுத்தாரென்க. ஆகலானென்பது சொல்லெச்சம். உந்துஞ்சிவிகை - இன்னவிடத்திற் செல்கவென்ற துணையானே ஆண்டுச்சேறற்குரிய தேவயானம். திரிகின்றாரென்றூது திரிகுவரென்றார், விழாவில் இப்பொழுது பரித்தாரும் தேவராவரென்பதறிவித்தற்கு.

ஙச. உனக்கே மிளிர் தருமென இயையும். இழந்துபெற்றார்க்கே நன்குவிளங்குமென்பது. வருஞ்சைவநலம் - சின்னாளகன்று பின்னர்ச்சேர்ந்த அச்சைவத்தின் சிறப்பு. கூர்ந்து மிளிர்தரும் என்பதனை நாவுக்கடையாக்கிச் சைவநலம் வரும் என்றலுமாம்.

ஙரு. இருவரையும் தாமவாவிய வாசனையகலத் திரோபவித்து இங்ஙனஞ்சேர்த்திலரேனும் அவ்வின்பத்தைச் சிற்றின்பமாக நுகராது திருவடிப் பேரின்பமாக நுகர்ந்தனரென்பது. மகிழடி - மகிழ்ச்சியைப்பயக்குந்திருவடி, மகிழமரத்தடி என இரட்டுறமொழிக. இருத்தல் - கைலைக்கண் வதிதல். இது நிந்தாஸ்துதியாகவும் நிற்பதோர்க.

ஙசு. வல்லார்க்கேதருகுவனென இயையும். தற்போதமிழந்து இறைவர்பணியினின்றாராகலின் இவரைவழிபடுவார்க்கு அவ்விறைவரே முத்தியளிப்பரென்பது. கடிவு - நீக்கம்.

ஙஎ. வல்லாரென்பது-வல்லுநரையும் வல்லுநரல்லாரையும், ஒருஞானமென்பது - ஒப்பிகந்தஞானத்தையும் வைராக்கியஞானத்தையும் சுட்டி, இரட்டுறமொழிதலாய் நின்றன. ஏகாரம் தேற்றத்தோடுபிரிநிலை.

ஙஅ. தவம் - சரியையாதிகள். புனலூணாக ஏனைநுகர்வு அற்றானும் அலன் என உம்மை பிரித்துக்கூட்டுக.

ஙகூ. பரமயோகி வழிபடுகின்றாரென அறிஞர்விதப்பராயின் நீர் இருதேவிமாரோடு முயங்குவது தகுதியோ? தகுதியன்றாயினும், அவர் கிரியாசத்தியும் ஞானசத்தியுமாய்த்திகழ இறைவர்போன்று ஆன்மாக்களுக்குப் போகமோக்ஷங்களை அளிக்குஞ் செயல் உமக்கும் அமைந்த அவ்வியல்புணர்ந்து வழிபடாது சிலர் போகியென உம்மைப்புகலாநிற்பதென்னை?

# பிக்ஷாடன நவமணிமாலைக்குறிப்புரை.



பிக்ஷா அடனம் - பிட்சை ஏற்றல்; அடனம் - ஏற்றல்.

க. தாழ்ந்தனள் - விடையின்மையிற் கீழ்ப்பட்டாள், தோற்றவர் வென்றவரை வணங்குதல் இயல்பாகலின் வணங்கினாள், தனக்கும் வெற்றறையென்பதுணர்ந்து தலைகுனிந்தாள், பிட்சாடனரைப் பிரியமனமின்றித் தங்கினாள். தாழ்தல்- கீழ்ப்படுதல், வணங்குதல், குனிதல், தங்குதல்.

உ. குன்றா முதுகுன்றுடையான் - அழியாதபழமலைநாதர், குன்றாகிய பழமலைநாதர். அருள்குன்றாதவனுமாம்; வளங்குன்றாத முதுகுன்றுமாம். இலாத வெண்கோவணத்தான் என்பது நக்கன் என்னும் பொருட்டாய்க் "கழிந்தபற்றுடை வசிட்டன்" என்றாற்போல் நின்றது. இரண்டத்தனை - சிறுமையைக் குறித்தற்குக் கூறுமெண்ணளவு, இரண்டாகிய அவ்வளவு. கோடி - கொள், புதிது. என்றிட்டனள் - என்றுகூறினாள்; ஒருசொன்னீர்மைத்து; என்றுகூறிப் பிச்சையிட்டாள்.

௩. எப்பாத்திரம்-சற்பாத்திரம், அசற்பாத்திரம், பிட்சாபாத்திர முதலியன.

௪. உமை-உம்மை, உமாதேவி. வீடு- இல்லம், மோட்சம். ஆட்டினின்பால் இது வேண்டிலைவைகொல்லென எனமாறுக.

௫. தலையைக்கிள்ளு மியல்பினரென்பதோராது இவர் சொல்லை நம்பினளே இவளதறியாமை இருந்தவாறென்னையென்று சிரித்தது என்க; நகுதலைஎன்பது

௬. வனைதல் - செய்தல். சக்கரம் - மட்சக்கரம், கண்ணாகிய அரம். சக்கு-கண். குயத்தி - குயச்சாதிப்பெண், தனங்களையுடையபெண், இளமையுடையபெண், அல்குற்றேரையுடையபெண். குயவன் என்பதற்கும் ஏற்றபெற்றிசிறிதுவிகற்பித்து இப்பொருள்கள்கொள்க. முதுகுன்று இறை இயம்ப - பழமலையார் விடை கூற, பழமலைநாதர் கூற. சிற்றிடைச்சி- சிறிய இடையினையுடையாள், சிறிய இடைச்சாதிப்பெண். ஓர் - அறி, ஒரு.

௭. வண்டு - வளையல். எங்கை - எமது கரம், எமது சார்பு. செட்டிமங்கையர் தங்கட்கு என்பது இனி வைசியப்பெண்களாய்ப் பிறக்கும் இருடிபத்தினிகளாகிய தங்கட்கு எனவும் பொருடோன்ற நின்றமைகாண்க. கூடல் - புணர்தல், மதுரை.

௮. ஊருக்குள் பிச்சை - நகரத்தின் கண்பலி. மற்றொன்று இடக்கரடக்கல்; அதற்கு ஊர் - தொடை. மற்றொருவர் - உமாதேவியார், தங்கணவர். அது யாருக்குக்கிட்டும் - அவ்வூருக்குட்பிச்சை எவர்க்குங்கிட்டாது. சோறுநீர்கொளும் - அவ்வுண்மையைச் சொல்லுகின்றோம் நீர் ஏற்றுக்கொள்ளும், சோற்றையும் நீரையும் ஏற்றுக்கொள்ளும், சோற்றை நீர் ஏற்றுக் கொள்ளும்.

அதற்கு உளர் மற்றொருவர் யாருக்குக் கிட்டும் அது சோறும் நீர்கொளும் என்பதனை மற்றொருவர் அதற்கு உளர் யாருக்குக் கிட்டும் அது சோறு நீர்கொளும்என மாற்றிப் பிறர் எவர்க்குங் கிடையாது உமக்கே கிடைக்கும் அவ்வூர்க்குட் பிச்சையையும் சோற்றையும் நீர் ஏற்றருளும் என மற்றொருபொருளுங் கொள்க.

௯. சழங்கல் - சரிதல். பகற்போது விழுங்கும் அன்னம் கொள்வாய் என்று வேண்டினன் எனவே இராப்போது மனையில் மனம் வழங்குவன் என்றாள் என்பது குறிப்பெச்சம்.

**பிக்ஷாடனநவமணிமாலைக்குறிப்புரை முற்றிற்று.**



# பெரியநாயகியம்மை

## நெடுங்கழிநெடிலாசிரியவிருத்தக்குறிப்புரை.

க. ஊடறணியுமாறு தேவியைப் பெருமான் வணங்குங்கால் தேவிமுகாம்புய மலர்தலின் அவரைக் கொடியாக உருவகஞ்செய்தார். முழுமணி - இலக்கணமுற்றுமமைந்த நீலமணி. கனல்மழு - வினைத்தொகை; கனலும் மழுவுமென உம்மைத் தொகையுமாம். சிலம்பு-மலை. தினமணி-சூரியன். மாசுணம் ஆய் - பெரும்பாம்பு போன்று. ஆதல் - உவமவுருபிடைச்சொல்.

உ. வரைகழையென மாற்றுக. உருத் திரைந்து - உருவந்திரைந்து, உருத்து இரைந்து என்க.

ங. தடுத்தல் - வென்று உரிகவர்தலின் மேற்று. உரிபோர்த்தடுத்தவெனப் பாடங்கொண்டு கண்ணழிக்கில் மோனை நயமின்மை தேர்க. இம்மணிமுத்தாநதிஎனும் பிடப்படுமென்று தானும் எனும்பையணியும் தெய்வத்தன்மைபொருந்தியநதியாகி இந்நதிபோலவே அன்னங்கொண்டுமெய் வெளுப்ப இருத்தலால் அக்கங்கையை இகழ்ந்து இயம்பும் கீழ்மையொன்றும் இல்லையென்பீராயின் (கீழ்மையடையாமைமாத்திரத்தானே) இதன்குணம் அதற்குக் கிடைக்குமோவெனக் கூறும்படி கிளர்நதியென்க. அணிதல் - இடப்படுதல்; அன்னம் - பிண்டமும், அன்னப் பறவையுமாம். இதன்குணம் - சிவசாரூபமளித்தலாதியன. இருந்து - வினையெச்சத்திரிபு.

ச. கொச்சை - சீர்காழியையும், திருத்தமுருச்சொல்லையும்; எட்டி - எட்டிமரத்தையும், தாவியென்னு மெச்சத்தையும்; திகிரி - மூங்கிலையும், சக்கரத்தையும்; வாங்குதிரை - வளைந்ததிரையையும், தாவுங்குதிரையையும்; கொடுமரம்-வலியமரத்தையும், வில்லையும் உணர்த்தின.

ரு. மலம் மாயை தவிடு உமி என்பன நிரனிறை. பாகம்-மலபரிபாகத்தையும், சமைத்தலையும்; அருத்தல் - சிவபோத மூனைத்தெழாது அர்ப்பித்தலையும், உண்பித்தலையுங் குறித்தன.

சு. விருத்தகிரிக்கண் மாய்வனவாகிய உயிர்கள் பெறுஞ்செயலால் நாடின் நும்மூர்க்கு நவின்ற அம்முறையே நீவிருள்ளீர்; ஆகலின், எவ்வுயிர்க்கும் நீவிர் தந்தையுந்தாயும் அல்லீர்; எனநிந்தாஸ்துதியின் வைத்து அத்தலத்திலருளுமாறு நிகழ்த்தியவாறு. ஒருவனென்றது சண்டுமுனிவரை.

எ. பாய்சுருட்டல் பாற்கடலொலியினும் இவ்வொலி மிக்கிருத்தலாலென்க.

அ. கொடுத்து - பழமலைநாதரால் கொடுக்கப்பெற்று. குளத்தினிற்கொடுத்தது என இயையும். குளமென்பது - நெற்றியையும் கமலாலயதீர்த்தத்தையும் சுட்டியது. நெற்றியிற் கண்தருதல் - சிவசாரூபமளித்தல்.

கூ. கொள்ளல் - ஏற்றல். ஆடலவாகி இங்கு இதன்கண் அடையா ஆடி அமர்வுறவெனவும், கெண்டை குதிப்ப எனவும் இயையும்.

கய. புலி மானைத்தொழுது மருவியிருத்தலால் அம்மான் தனதினமாகிய பசுக்கள் தன்பாங்கரடைந்து தன்னால் அப்புலியைப் பயமற எய்தப் பெற்றதாயிற்று என்றறிந்து அப்பசுக்களெல்லாம் அம்மானால் அப்புலியை அடையப்பெறுகின்றன வென்றது, திருவருட்சத்தியானே ஆன்மாக்கள் சிவத்தையடைய வேண்டுமென்னும் சித்தாந்தநோக்கியென்க. தனதென்றது சத்தியையும், சாதிகளென்றது ஆன்மாக்களையுமாம். தேவியார்முன் கங்கையின் பெயரையுஞ் சொல்லாதகடவுள் அத்தேவியார்க்கு எனதுபுகழைஎடுத்துக் கிளக்குமென்று ஆரவாரித்து அக்கங்கை போலத் தான்மறையாது வெளிப்பட்டு விளங்கும் இந்நதியென்றது அத்தலமான்மியங் குறித்தென்க.

பெரியநாயகியம்மை நெடுங்கழிநெடிலாசிரிய விருத்தக்குறிப்புரை முற்றிற்று.

# பெரியநாயகியம்மை

## கலித்துறைக்குறிப்புரை.



௧. இருமாப்பனென அரன் உன்னைப் பெறவுற்றனை என்க.

௨. இருத்தி அகற்றுமென இயையும். செஞ்சிலை - ஈண்டு அம்மி. மதி - அறிவு, சந்திரன்.

௩. புனலும் முக்காற்பொறுக்கும் வழக்குண்மையின் இழை பொறுத்தலாதியனவும் புலவரால் பொறையென விதக்கப்படினும் அவை பொறையன்று; இப்பிழைபொறுத்ததே நற்பொறையென்பது. மழை - குளிர்ச்சி.

௪. பொய்யன்றென்பதற்குப் பொய்யல்லையாம்படியென்க; யான்சொல்வது பொய்யல்ல என்றலுமாம்.

௫. வணங்கில் சுற்றும் கிழிக்கும் படும் ஆகலின் பின்வாங்கி நில் என்றபடி. கல் - மேரு.

௬. முதிர்வேனிலில் என்பது தாப்பிசையாய்நின்றது.

௭. உடன்செல்லாமையால் நின்போல அருளாளர் இலரென்றுகூறச் செய்தனை என்பது.

௮. செச்சைமலர் புரைவானொடு சொல் என்க.

௧௦. கதை யான்கூறுவேன் அதற்குக் காரணம் எனக்கு விளக்குக என்பது. ஏதுவென்பதற்கு எப்பொருளெனினுமொன்று.

௧௧. முலைவிலை - பரிசத்தொகை.

௧௨. பெண்ணொழித்ததென்பது - மக்களென்னும் பொதுமொழி ஆண்பாலையே உணர்த்திற்றென்பது. என்பாரொடு சொல்பவர் நாணவென இயையும். தாள் - முயற்சி.

௧௩. ஏதுவென்பது காரணப் பெயரெனவும், எவ்வாறெய்திற்றெனவும் பொருள்படும். இச்செய்யுள் சிலேடை.

௧௪. விழியிணை - சூரியசந்திரநேத்திரங்கள்.

௧௫. கிள்ளையென்பது பிள்ளையென்பதற்கியைய இணைந்துவருமொழியாய்க் கிளியையுமுணர்த்திற்று.

௧௭. கணவரளித்ததுகொண்டு அறம் வளர்ப்பார்க்கே கற்புமாட்சியுரித்தென்பது நூற்றுணிபாகலின் மனைமாட்சியெய்து முனக்கே பெருங்கற்புமாட்சியெனவும், அஃதியற்றார்க்கு எங்ஙனமெய்துமென்பார் பினைமாட்சி யார்க்குண்டெனவுங் கூறினர்.

௧௮. முன் பதிமேலெதிர்ந்தவெனவும், உனது நடு செங்கரும்போ இது பிடியுளடங்கியதென் சொல் எனவுங் கூட்டுக. சிலைபோதல் - சிலையிற்றேர்தல். நடு - இடை.

௧௯. தோளி - வினைக்குறிப்புப்பெயர். அழுமாறு நங்கணவர்தலையும் இவ்வாறுங் கொலென்னும் ஏக்கத்தாலென்க.

பெரியநாயகியம்மைகலித்துறைக்குறிப்புரை முற்றிற்று.



## நன்னெறிக்குறிப்புரை.



௧. பூங்கை துன்றுசுவையை நாவிற்கு நயந்துதவும்; அது தன்னைப் புகழவோ புகழ்தற்கன்று என்பது.

௨. பிறிது - ஈண்டுக் கொடிதென்னும்பொருட்டு. நல்லோன் - சாக்கியநாயனார்.

௪. பேறு - செல்வம். பெய்யா - பெய்து.

௬. எண்ணிரண்டு கலையும் எனக் கூட்டுக.

௭. முனிக்கரசு - ஈண்டு அகத்தியர்; இவரைச் சிவபெருமான் தம்மை ஒத்தவராக விதந்த சிறப்புடைமையினென்க.

௯. விரவலரை ஐ அச்சப்பொருளின் வந்த இரண்டனுருபு.

நன்னெறிக்குறிப்புரை முற்றிற்று.

# திருவெங்கைக்கோவைக்குறிப்புரை.

(காப்பு.) கோவை-கோவையென்னும் நூலையும், கோவைக்கொடியையும்; கொம்பர் - கொம்பையுடைய யானை முகக் கடவுளையும், அர் இறுதிபெற்ற கொம்பையுமுணர்த்தலின் சிலேஷை.

க. முகமாகியதாமரை முதலியன கொண்டு எதிர்ப்பட்டதென்க.

உ. பெண்ணோடிருக்கும்பொழுது கண்ணோடிருக்கும் முகம்போல்வதாகிய இடம், மண்ணுதியவற்றுள் எதுவோ அது சண்டிலம் என்பது. அவனிமங்கை வரையரமங்கை திருமங்கை தேவமங்கை நீரரமங்கையென்பவருள் எம்மங்கையோவென்பான் அவரவரிடஞ்சுட்டி ஐயுற்றவாறு. பிந்தியதும் இது.

ச. நம்படியே சுமவாநின்றுநண்ணியமையைக் காட்டியது என்க. படி - இப்பூவுலகம்.

ரு. இது (கOகக) ஆவது திருக்குறளின் கருத்தது. (இருநோக்).

சு. இது (கOஙக) ஆவது திருக்குறளின் கருத்தது. (இரக்க).

எ. நிக்கிரகம்போல் அநுக்கிரகமும் புரிகவென்பது.

கO. காசதாலியம் - ஓர்நியாயம்; இது காக்கையேறப் பனம்பழம் விழுந்ததென்பது. இதனை அறிந்திலிரோ என்றபடி.

கச. பொருநை - தாமிரபர்ணிநதி.

கஉ. உதவுதற்கே பொன்மலையை வளைத்தது; அல்லாமல் மலையை வில்லாக் குதல் யாண்டையதென்பது.

கங. காந்தருவமணம்புரிதற்கு இடம் உற்று அமைந்தது என்பது. கணி-வேங்கைமரம்.

கச. மிகல் - மிகை. புரந்தவன் - சிபிச் சக்கரவர்த்தி. அயல்படர்ந்தேறல் - தனங்களிலணியப்பட்டுப் பரவிநிலவல்.

கரு. உன்றனைப்போலப் புதைப்பது கதையாலும் அறிந்திலம் என்க. இத்துறை நாணிக்கண்புதைத்தலெனவும் படும்.

கசு. இம்மலையரண் கிடைக்கின் மதனைவெல்லலாம் என்பது.

கஎ. சம்தாபம் - பிறவிவெப்பம்.

கஅ. புல் - புல்லுணவு. அருந்தவம் குறைவின்றித் தோன்றும் என்பது. முகாம்புயத்துக்கு என உருபுவிரிக்க.

உக. ஐந்திந்திரியங்களும் இன்பமெல்லாந்துய்த்தன என்க.

உச. நிலவு - ஈண்டு முறுவலொளி. ஆவி - தடாகம்.

உரு. சதாகதி - காற்று.

உசு. கைம்மா - கையினுள்ளமான்.

உகூ. மொழிமாற்றுப் பொருள்கோள்- எண்வகைப் பொருள்கோளில் ஒன்று; அது அவ்வவ்விடங்கட்கியைய மொழிகளை மாற்றிப் பொருள்கொள்வது. வழி - முறைமை.

ஙக. இடைமிடித்தார் அன்னம்பிடி என்பன சிலேஷை.

ஙஉ. பாயவெள்ளம் - பயவெள்ளம்; ஈண்டுப் பாற்கடல்.

ஙச. தாமரையும் மதியும் ஒளியிழத்தலைக் கண்டவர் உவமியார்; காணுதவரே முகத்துக்கு உவமிப்பரென்பது.

ஙரு. உற வாழிய என்க.

ஙசு. புயல் கரவு - மேகமாகிய முதலை

ஙஎ. ஒருவன் என்றது ஏலேலசிங்கரை.

சக. போலவும் போலவும் உனைநோக்கிநிற்கும் என்க.

சஉ. போல் வெல்ல வலியில்லை என்க. வன்னி - கிளி.

சச. மலை பணி அரி வில் நாண் கணை என்பனவும், சிலை குணம் கணை வேழம் சுரும்பு அலர் என்பனவும் நிரனிறை. வந்தணண்பா என்னும் பாடத்திற்கு மொய்குழல் வந்தள் என்க; வந்தனள் எனற்பாலது ஈண்டு அன்சாரியை பெறுது நின்றதென்க.

சஎ. பெண்டு - பெண்.

சகூ. முகை -ஈண்டுத் தனம்.

ருச. அகம்-மனம், வீடு. திட்டி—கண், நுழைவாயில். வேழம் - யானைபோலுந் தனம், யானை.

ருசு. தனத்தார் இடை இறையவன் என்பன சிலேஷை.

சுங. சங்கம் - சங்கு, கூட்டம். அன்னம் - அன்னப்புள், உணவு. தாள் - தண்டு, கால்.

௬௪. சங்கேதம்-நியமம்.

௬௫. தார் - பூவரும்பு.

௭0. புணர்ச்சியினெய்திய வேற்றழகு சுட்டித் தலைவியைத் தெய்வமகளாகக் கூறியவாறு, எண் ஊடு - எண்ணுதலில்.

௭௧. கலைபோல் நொந்தேனென இயையும்.

௭௪. குளிர உரையீர் என்க.

௭௭. என்னேயென்பது இன்னதென் பதுபட நிற்குமொழி.

௮0. கான் ஐ கலை - காட்டிலுள்ள அழகிய ஆண்மான்.

௮௨. எனதம்புபாயக் கலைதுள்ளி வந் ததெனத் தலைமகன் சாற்றியும் இவர் மாந்தழையால் எய்தாரெனப் பாங்கி பக ர்ந்தது கையில் அம்பின்றித் தழைகொ ண்டு சார்ந்தமையினென்க.

௮௩. எல்லாம் கண்களே தெரிவிக் கும் என்பது.

௮௫. பொய் - பொய்ப்பொருள்கள். புனநடுவின் வம்மேவுறும் அது - புவனம். கும்மேல்வரும்வலை - குவலை.

௮௮. பொய் - பொய்ப்பொருள்.

௯0. ஊழ் ஒளி - வெயிலைவிரிக்குஞ் சூரியன்.

௯௩. வெங்கைவாணர்க்கு மழு இலை யேல் கவர்வம்; அகப்படின் அதிலுள்ள மான்பொருட்டு மதி கீள்வேம் என்க.

௯௪. கொங்கையே அறியாமையறிந்த தென்றது இடை வருத்தம் நோக்காமை யின் என்க.

௯௫. உலகவழக்குரை பொய்சொன்ன வாய்க்குப் போசனமுங்கிட்டாதென்பது

௯௭. கண்டாதியன சிலேஷை.

௧0௨. தாள்முறித்தல் - (கனத்தால் இடைவருந்தாவாறு) காம்பு களைதல்.

௧0௩. பாவாக்கி - பாவையருளும் வாக்கினர்; (ஆளுடையபிள்ளையார்.) ஆண் பனை பெண்பனையாக என்க.

௧0௭. மணிமேகலைநூல் - மணிகள் கோத்த மேகலையணிந்த நூல்போலும் இடை; மணிமேகலையென்னும் நூல். சிந்தாமணி - குன்றுதகண்மணி; சிந்தாம ணியென்னும்நூல். திருக்கோவை - அழ கியகண்ணை; திருக்கோவையென்னும் நூல். கோ - கண். உரை - வார்த்தை; மேற்படி சிந்தாமணி திருக்கோவைக ளின் உரை என்றிங்ஙனங்கொள்க.

௧௧0. கருங்கட்குடம் - கரிய சூசுகத் தையுடைய குடம் போலுந்தனம்; கரிய கள்ளையுடைய குடம் என்க. தாலம் - பனைமடன்மா; ஆகுபெயர்.

௧௧௧. பொடித்தல் - அரும்புதல்.

௧௧௮. நில பிறை - நிலவைப்பரப்பும் பிறை. தழை இட்டால் வளர்ந்தெழும் என்க.

௧௨௧. திருமகளுக்கு உறைவிடமாகி யாண்டும் பரவும் வல்லகோலாதிபத்தியத் திற்குத் தகுதிபூண்ட அண்ணாமலைரெட்டி யாரென்னும் அரசரமைத்த ஆலயமூல ஸ்தானத்திற்குப் பழமலைநாதரெழுந்தரு ளினர் என்னும் இது, தலைவி நாணால் நேரே உடன்பாடுகூறாது குறிப்பாற் கூறியவாறும். இதனுள்ளுறை:— அவ ரன்புகாரணமாகப் பழமலைநாத ரெழுந் தருளியாங்குத் தலைவரும் எனதன்புகார ணமாக அகப்பகுதிநாடிப் போந்தன ரென்பது; அகப்பகுதி - அகத்தே நிகழும் காம இன்பத்திறம். வல்லகோலாதிபதி யென்பது, அண்ணாமலைரெட்டியார் பரம் பரைக்குரிய பட்டப்பெயர். இவராலயம் வகுத்தது வெங்கையுலாவிற்காண்க.

௧௨௨. மாற்றி - போக்குதலையுடைய பெருமான்.

௧௨௩. வரையினவர் ஆளுரென இயை யும்.

௧௨௮. சேரலை மதிமானென்றது மட லேறுதற்குரிய பனைமாலையைத் தனக் குரித்தாகக்கொண்டமையின் என்க.

௧௩௧. பலர்செய்த-பலர்செய்தனவும்.

௧௩௪. கொடியாகியபெண் கொம்பரா கிய கணவனோடு ஆடிய எனவும், கொடி போலும் பெண்ணே கொம்பர்போலுங் கணவனோடு நீ கூடுதலைச்செய்ய எனவும் கொள்க.

௧௩௫. மருவலர் - மணமலர், பகைவர். அளியினம் - வண்டினம், அன்புடைச் சுற்றம். ஆர்ப்ப - முழங்க, கூவ. முரு கக்கடவுள் களிப்புறும்மயிலாடலை நோ க்கி நிற்கவெனவும், முருகக்கடவுள்போ லுந் தலைவர் காதலிக்கும் மயில்போல்ப வளே நீ அத்தலைவரோடு கூடுதலைச்செய் துநிற்க வெனவும் கொள்க.

௧௩௭. சிற்றம்பலமென்பது அதனின் மிக்கதொரு பேரம்பலமுண்டென்பது குறியாது ஞான அம்பலமெனக் கொள் ளக் கிடப்பதுபோன்று, சிற்றின்பமென்

பதும் அதனின்மிக்கதொரு பேரின்பம் உண்டென்பது குறியாது ஞானவின்பமெனக்கொள்ளக்கிடந்ததென்பது. சிதாகாசந்தன்னைப் புனைந்து சொல்வரென இயையும். சித் - சிற்றெனத்திரிந்தது.

கசo. அன்னம் வண்டு ஆகியவிவற்றின் உறவு முற்றும் விடுத்து மதியைநோக்கி இதழ்களைக்குவித்து ஏனைக் கஞ்சத்திற்கும், அம்சமந்திரம் உச்சரித்தலமைய வாயு முற்று மடக்கி அமுதப்பெருக்கொடு கூடிய சந்திரனை அகத்தே நோக்கிக்கொண்டு கண்ணிமைகளை மூடியென யோகிகட்கும் கொள்க.

கசஎ. கருமுன் - கருவில்; முன் - ஏழனுருபு. ஆயவெள்ளம் அணைகோல என்பன சிலேடை.

கரு௦. அந்தகனை அழைக்கும் வன்புநஞ்சு என்க. முன் பந்தனை இலர்—அநாதிமலமுத்தர்.

கருக. மணிக்குரல் இப்பொழுதுசேள்; கேட்கின் சிலை கரும்பாம், பகழி மலராம் என்பது.

கருச. தழல் - கவண்.

கருசு. பூமடவார் - கலைமகளும் திருமகளும்; இவ்விருவரையும் விழியாகக் கொண்டமைபற்றியே காமாக்ஷியென வழங்குவர். கா - கலைமகள்; மா - திருமகள்; அக்ஷி - அக்ஷமாகவுடையவள்.

கருஎ. அச்சுரும்புபோற்சூழ்ந்து காக்கவேண்டும் என்பது.

கசுo. மாளுதல் - கலைகுறைதல்.

கசுஉ. வைரோசனன் - வாணுசுரன்.

கசுக. இருந்தது அறிவிக்கவோ என்பது.

கசுரு. குறிப்பது போலும் என்க.

கசுசு. வெய்யவன் - சூரியன்.

களக. இறை - கை; ஆகுபெயர். மதன் மலர்க்கணை அஞ்சுமெய்யக் களபக்கோலமணிவர் என்பது.

களஉ. வில்லின்மாட்சிமையை மதித்தலுடைய கைத்தாமரை (இரவுக்குறிவேண்டி) அஞ்சலியாநிற்கக் காண்பான் விரும்பும் என்க.

களக. காற்றால் அசையும் அச்சருகு எழினும் இத்திறம் ஆபத்துவிளையும் வனத்து வர எங்ஙனம் திடங்கொள்வதென்பது.

களச. தலைவர் இருளில் வருகைக்குத் துணியாததுபோன்றாடித்து என்மனம் நின்மனம்போன்றுதுணிந்ததென்பது.

களஎ. குறிப்பிசையக் கரைத்துவந்தேன் என்க.

களசு. தலைமகளுக்கும் யானைக்கும் சிலேடை. வேல் - ஆயுதம், மூங்கில்.

கஅo. பூ அகமென்றது இலக்குமி என்பது குறித்து. இதனை ககசு - வது செய்யுளினும் காண்க.

கஅக. மாறன் - இளையான்குடிமாறநாயனார்.

கஅஎ. மட்டு - தேன், அளவு.

ககக. கம்பு - சங்கு.

ககஉ. செப்பு - சிமிழ். ஒது - உவமவுருபு.

ககசு. மறைவனத்திற் கதவுதிறந்தடைத்தவர் - ஆளுடையவரசும் ஆளுடைய பிள்ளையாரும். இருவர் - சூரியசந்திரர்.

ககஎ. இரவில் தலைவிக்குக்கொணர்ந்த பூமாலையைத் தான் வந்தமைக்கு அறிகுறியாக மாதவியிலிட்டகன்றமை குறித்தவாறு. மணம் - வாசனை, விவாகம்.

ககக. வேங்கைமரத்தினும் முல்லைமாலை சூட்டியகன்றனன் என்பது.

உ௦அ. மேவாதவண்ணம் கொட்டு பறையென இயையும். நெய்தற்பறை - சாப்பறை.

உகo. கொடி - காக்கை.

உகக. இது உகூக-வது திருக்குறளின் கருத்தது; (வாய்மை)

உஉ௦. பகர்ந்து இடருகுதும் என இயையும்.

உஉக. பொறி ஆலயம் - இலக்குமிக்குரிய செந்தாமரை.

உஉச. மலய அநிலம் - தென்றல், காம அனலம் - காமாக்கினி.

உஉரு. வம்பு - வாசனை, தீச்சொல். மதி - சந்திரன், புத்தி. வண்டு - சுரும்பு, வளையல். அம்பு-நீர், பாணம். கண் முத்து - கள்ளாகிய முத்து, கண்ணீராகிய முத்து. வெம்பு - விருப்பு.

உஉஅ. தருங்காமநோயைக் குறித்திலளாய் என்றும் பாடம், இதில் ஆய்-தாய். அணங்கிற்று - வருத்திற்று. வெறி - ஆடு; இது கொண்டது அத்தெய்வத்திற்குப் பலியீதற்கென்க. விதி - சிலேடை.

உஉகூ. கருங்கண்ணி அண்மைவிளி.

உகச. தலைமேற்படுபொறி என்றும் பாடம். வெறியாடல் - வேலனாடல்.

உகரு. சுகரும் வாமதேவரும் துறவின் முதிர்ந்த இருமுனிவரர்.

உகஎ. வேங்கைபூத்தலும் சந்திரன்பரி வேடங்கொள்ளுதலும் வாய்ந்தகாலமே மணம்புரிகாலமாகக்கோடல் வேடகுல மரபு. கணி - கணிப்பவனெனவும் பொருள்பயத்தலின் மணநாளுரைப்ப வென்றும், மலர் பொன்போற்குவிதலின் கடன்றரவென்றும், அக்காலைத் தடை செய்தலியல்பாகலின் ஊர்கோளைத் தலைமகள் புறம்போகாவாறு அன்னையிட்ட சிற்றூகவும் உருவகித்தவாறு. ஊர் - பரி வேடம்.

உகஅ. நின்பழி - நினக்குநேர்ந்தபழி. கரத்தல் - தலைமகள்பிரிவால் உளவாகும் பீர்பூத்தல் வளைகழலலாதியன புலப்படா வாறு மறைத்தல்.

உககூ. ஒளிவால் இருந்தார் என்றும் பாடம். குறி - குறியிடம்.

உசㅇ. நந்துதுயில்கொள் என்க.

உசக. கோல் - சூரியன்.

உசங. வண்டெனநெருங்கும் என்க. கடி - பேய்.

உசஎ. நாளைவராமல் மறிப்பீராக வென்றது இன்றேயான் இறந்துபடுவன் வருவதெற்றிற்கு என்பது தோன்றுதற் கென்க.

உசஅ. களபமென்னப் பூசுக என்பது.

உசுஉ. ஆகி வேறுதவறு விளைதல் இல தாக நின்னுயிர்போல்வாளைப் புரந்தேன் என்க. இலதாய் - எச்சத்திரிபு.

உசுச. இது கசுக - வது திருக்குற ளின் கருத்தது.(செல்லாமை). முன்பின்- அறமும் இன்பமும்.

உசுஅ. பிரியாத தலைவர் பிரியப்பட் டவள் நீயொருத்திதானோ என்பது.

உஎㅇ. மான்பிணைகாண்டலும் மீள்வ ரென்க.

உஎக. பூட்டாதவில் - மேகவில். தீட் டாதவம்பு - நீர்.

உஎஉ. வம்பு - காலமல்லாதகாலத் திற்றோன்றுவது. குயில் ஏமருபருவம் - கார்காலம். ஏமரல் - கலங்கல்.

உஎங. பசப்பு - காமத்தால் வேறுபடு நிறம். குருகு - வளையல். தோன்றி-செங் காந்தள்.

உஎரு. சஉகங-வது திருக்குறட்கரு த்து (உரனசைஇ).

உஎஎ. தேர்செலுத்துக என்க.

உஎஅ. அன்று - அன்றி.

உஎகூ. ஆகிய வென்பது ஆகிய க எனப் பெயரெச்சமாகியும், ஆகிய ஆகு குமென வினையெச்சமாகியும் பொ ன் பயந்து நின்றது. கல் - முறையே டி லும் ஒலிக்குறிப்புமாம்.

உஅㅇ. கரம் ஆர்க்கும் வலம்புரிவா என்க.

உஅஉ. துறந்தார்மனம் மறத்த நினைத்தலுமின்றிப் பரமசிந்தனை மாய் நிற்பதுபோன்று என் மன தென்க.

உஅங. விண்மணி - சூரியன். ணி

உஅசு. இந்தீவரம் - கருங்குவளை தி

உஅஎ. துயரம்செல்லுமென இயை ா

உஅஅ. கணம் - விண்மீன்.

உகூㅇ. மால் - மேகம்.

உகூக. கூறுமெனில் தெளித்ததற் குருகும் கரி உண்டு; எனவே அக்கா பிறிதொன்றுமில்லை என்றபடி. இலை மனை - பர்ணசாலை.

ஙㅇஎ. உறை - நீர்.

ஙㅇஅ. கலந்தாங்கு மணஞ்செய் என்க.

ஙகㅇ. சகஉㅇ-வது திருக்குறளின்கரு தது. (அனிச்சமும்).

ஙகஉ. பாலை நெய்தலாகப்பாடிய திருநணிபள்ளியில்.

ஙகங. பெண்ணணங்கு-தார்க்காதே எனவே, காவியாதியபோலும் அத்தே யுறுப்பன்றி வேறுகாவியாதியவும் அ பூத்த வாவியாதியவும் சுரத்தின்கண் றென்பது.

ஙகரு. நாண்முதலியன மற்றை போலும்; கற்பு மங்கல நாண் என்க.

ஙகஅ. சிவன் உமையையும் வ அருந்ததியையும் துறந்தாலும்

ஙஉக. நிழல்போல நேர்ந்தது

ஙஉசு. கணி - கண்ணி. வேழ கழைக்கூத்தர்.

ஙஉஎ. இந்நகர்முன் பொன்னகர் னற்றநகர் என்றது.

ஙஙசு. விநாயகக்கடவுள் காக் விற்சென்று காவிரிநதியைக் கவி சரிதம் கந்தபுராணத்துணர்க.

கசஅ. பூவிதழ்களைப் பரப்பி அதில் வப்பினும் குழையும்பதம் என்க. வின்முகம் - பூவிதழ்.

கககூ. மகளிர் புறம்போந்துலாவுதற் பனும் பேதைப்பருவமும் அஃதியலாத ங்கைப்பருவமும் போலாது, பெதும் ப்பருவம் இவ்வீரியல்பும் ஒருவா யந்துனதாகலின் இதற்கு இத்தகைய விரவுகட்கு இடையதாகிய கருதுமாலை மமாயிற்று. பெதும்பைப்பருவம் ாடங்கியே புறஞ்செலாதவள் மங் கப்பருவம் வந்துழிச்சென்றது வியப் ன்றபடி.

கசo. பன்றியெழுங்கால் கொழுந ர்கு அபயமென்று.

சக. வண்டல் - ஈண்டு மகளிர் விளை ட்டுக் கலங்கள்.

கசங. அல்குலானொடு என்றுயிலை ர்க.

கசஎ. தலைவனடி பேரடியும் தலைமக டி சிற்றடியுமாயிருத்தலின் வெள்ளைக் ரிய அளவடியும் வஞ்சிக்குரிய சிந்தடி ல்லது குறளடியும் போல்வவெனவும்; வை தனித்தனிசெல்லாது அச்சமாகிய ரணங்களால் விரவலின் இவ்விடம் வ்வீரடிகளும் விரவும் கலிப்பாவொப் ானவும் கூறியவாறும். தலைவனடியை ள்ளையடியென்றது வலம்புரிச்சங்க கையுடைமையினென்க. வெள்ளை - ண்பா, சங்கு. வஞ்சி - வஞ்சிப்பா, ண். கலி - கலிப்பா, கெடுதி; வஞ்சக ாம்.

கருஉ. இதில் வீ பறவை.

கருங. ஆற்றுப்படுத்தல்-ஆற்றுவித்தல்.

கருஎ. எனக்கோ அனைக்கோ எவர்க் ா என்பது.

கசுo. எழுநாவொன்றுசான்றாக - அக் ரி ஒருசாட்சியாக.

கசுரு. மார்பினருடன் போயினள் றும் பாடம்.

கசுசு. அணிவரையி - வில்லம் என் ம் பாடம்.

கசுஎ. இம்மலை கன்மலையெனினும் த்தோற்கு இடந்தருதலால் பொலிக றபடி.

கசுஅ. செம்பாதி - நேர்பாதி. சிவபெருமான் மணந்து சரீரம் பாதியாயினர்; இவர் பூரித்தனர் என்பது.

கசுகூ. வருந்தல் - ஈண்டு முயற்சியின் மேற்று.

கஎo, கககூ-தில் விழைவுக்குறிப்பு.

கஎக. மலரொன்றுபோல அலர்களை எங்ஙனம் சுமந்தனை என்பது; அலர் சிலேடை.

கஎச. அன்று - அன்றி என்பதன் திரிபு.

கஎரு. சஅ-வது திருக்குறளின் கருத்தது; (ஆற்றின்).

கஎசு. மேகங்கள் கீழ்நிலையினவாகலின் அருந்ததிநிலையிற் சேறலும் சொரிதலும் இன்மைபற்றி என்றும் பெய்யா என அவள் கற்புக்கு அவ்விசேடமின்மையை விளக்கியவாறு.

கஅக. சேதகம் - சேறு. குளிர் - நண்டு.

கஅச. வெட்சி பூப்பறிவிக்கும் மங்கையர்க்கும் நிரைகவர்வார்க்கும் உரியவாகலின் இங்ஙனம் கூறியவாறு.

கஅசு. கககச-வது திருக்குறளின் கருத்தது. (இன்னு)

கஅஅ. இன்பினை அமுதொப்பதன்று; சுவையே ஒப்பது.

ககூo. மணிபோலுயிர்த்து நெய்யாடினள் என்க.

ககூக. பத்திரதன் - தசரதன். புத்திரன் - தந்தைதாயரைப் புத்தென்னு நரகத்திருந்து எடுப்பவன்.

ககூஎ. கருசு-வது திருக்குறளின் கருத்தது. (ஒறுத்தார்க்).

உoக. பரவை - பரவைநாச்சியார்.

உoஅ. ககக-வது திருக்குறள். (கண்ணுடையர்)

உகஎ. எஅஅ-வது திருக்குறள். (உடுக்கை.)

உகஅ. தீர்துயர் - பிறவினையில் வந்த வினைத்தொகை.

உஉஉ. நாகு - இளமை.

திருவெங்கைக்கோவைக்குறிப்புரை முற்றிற்று.

## திருவெங்கைக்கலம்பகம்.

க. கலை - லளவொற்றுமை.

சு. வில்லிறைவன் - இராமர்.

கo. சிவபெருமானுக்கு அம்பு திருமாலும் நாண் ஆதிசேடனுமாகலின் அம்புமேலிருக்கு நாரி என்றும், மன்மதனுக்கு அம்பு மலரும், நாண் வண்டுமாகலின் அம்பின்மேலிருக்கும் நாரி யென்றும் முரண்பட விதந்தபடி.

உஉ. மை - ஆடு.

உரு. விமலேசரெழிலொன் றிரதக்கரலென்றது, சிவபெருமான் கொண்டருளிய பூமியென்னும் இரதத்தின் உருளையாகிய சூரியனை; பின்னர் இரதக்காலென்றது, அச்சூரியனுடைய இரதத்தினுருளையை; வாளிவாளி என்றது, அப்பெருமானுடைய பாணமாகிய திருமாலின் பாணத்தை. எனவே, என்றும் நியதியாகக் கிழக்கேதோன்றி மேற்கேயோடும் சூரியனுடைய இரதவுருளை தெய்வகதியால் அந்நிலைமாறித்தெற்கேதோன்றிவடக்கேயோடினும்,சுட்டிவிடப்பட்டாரைத் தப்பாது கொன்றேமீளும் அத்திருமாலின் பாணம் தவறுதலை யடையினும், அக்காலத்தும் என்மொழி பிறழாதெனத் தலைமக னிசைத்தவாறு.

ஙசு. சுடர்கால்- சூரியசந்திரர்களாகிய உருளைகள்.

சஉ, என்னடிகளென்றது திருவள்ளுவநாயனாரை.

சஅ. ஐயவென்பது அயவெனப் போலியாயிற்று.

ருரு. தமிழ்வந்து - தென்றல்; தமிழ் - இனிமை, தமிழ்ப்பாஷை.

ருசு. நாதித்தல் - ஒலித்தல்.

எரு, பவம் - உலகம்.

அங, திருமறைக்காட்டுத்திருத்தாண்டகம் - க. (தூண்டுசுடர்.)

அச. தீபம் - சுவாதிநாள்; ஐப்பசிமாதத்திலே சுவாதிநக்ஷத்திரத்திலே மழைபெய்யுமென்பதைச் சிந்தித்துள்ளவரென்னுங் கருத்தால் "தீபந்தோன்றும் யுயணினைவத் தீரார்" என்றுள். இச்செய்யுளில் சிலசொற்கள் சிலேடைப் பொருள்தந்து நிற்கின்றன.

அரு. மாணிக்கமலை - இரத்தினகிரி; வாட்போக்கி என்பதும் இதுவே. இதில் பாலைக்கவிழ்த்த காகத்தை ஒரு இடையன் பொருட்டு எரித்த சரித்திரவிரிவை அத்தலபுராணத்துட் காண்க.

அகூ. அறிதல் - எண்ணுமதித்தல்; "பெறுமவற்றுள் யாமறிவதில்லை" என்னும் திருக்குறளிற்போல.

கூங. மகளிர்கூந்தலை மன்மதனுக்கு அரணாகவகுப்பது மரபாகலின் குழற்காடு குறைத்தகருத்து மதனைப்பிடிக்கவோ என்றார்; இதனை "மட்டுக்கணைவேள் அரணாகவளர்த்த குழற்காடு" என்னும் பிரபுலிங்கலீலையாலுமுணர்க.

கூரு. இந்தீவரம் - கருங்குவளை. அதிரேகம் - அதிசயம், உயர்ச்சி.

---

## திருவெங்கையுலா.

கண்ணி-உச. கோசலைநாட்டிலே மணிபிங்கலை நகரத்திலே அந்தணகுலத்தினுதித்த விவசித்தென்பவர்வறுமைமேலீட்டால் எங்குமுழன்று வருங்கால்,ஒருவனத்தில் ஒருதெய்வீகச்சுனையில் மூழ்கி, அங்கே குபேரனது தங்கையாற் கிடைத்த ஆபரணங்களைக் கைக்கொண்டு, ஒருகணநாதருணர்த்தியவாறே விருத்தகிரியை யடைந்து,அசரீரியின்படி உரோமசமுனிவரநுக்கிரகம்பெற்று, அருந்தவம்புரிந்து பழமலைநாதர் கட்டளையின்படி அவ்வாபரணங்களை வைக்கப்பட்ட வன்னிவிருக்ஷம் வேண்டியபொருளுபகரிக்க, அரிய திருப்பணி பலவும்புரிந்து சிவபதமடைந்தனர். இதன்விரிவை விருத்தாசலபுராணத்துட் காண்க.

கஎ. அன்றுதல் - பகைத்தல்.

ககூ. ஐந்துமுதல் எழுவயதளவும் பேதை.

ககo. எட்டுமுதற் பதினொருவயதளவும் பெதும்பை.

... - மென்மை, செய்யுமென்னும ...

உகஎ. ஓதி - அறிவு.

உஉஎ. பன்னிரண்டுமுதற்பதின்மூன்றுவயதளவும் மங்கை.

உசுஎ. பதினான்குமுதற்பத்தொன்பதுவயதளவும் மடந்தை.

உஎஅ. உடைந்தாள் - தோற்றவள்.

உஅச. எய்யாமை - அறியாமை.

கூoo. இருபதுமுதல் இருபத்தைந்துவயதளவும் அரிவை.

கஙசு. இருபத்தாறுமுதல்முப்பத்தொருவயதளவும் தெரிவை.

கசுக. நாவல்விலங்கல் - மேருமலை.

கன்னி-வகை. முப்பத்திரண்டு முதல் நாற்பதுவயதளவும் பேரிளம்பெண்.

## இட்டலிங்கவபிடேகமாலை.

௧. சிவலிங்கமே எவ்வகை மூர்த்திகளுக்கும் மூலமென்பது.

௨. ஆக்மோற்பவவகைகளும், அவற்றில் விதிக்கப்படும் விதிமார்க்கம் பத்திமார்க்கம் இரண்டானும் முத்தியுண்டென்பதும் விளக்கியது.

௩. நின்மலபஞ்சாவத்தையினியல்பும், சிவம் அவற்றிற்கும் அதீதப்பட்டதென்பதும் கூறியது.

௪. பெருமானுக்கு ஒன்றினும் விழைவில்லையாகவும் ஆன்மாக்களுய்வான் ஆகமங்களில் ஆராதனைவிதித்தது.

௫. பெருமான் அனுக்கிரக நிக்கிரகவியல்பு.

௬. வீரசாமானியருக்குத் தூலதனுவிற்செய்யப்படும் இஷ்டலிங்க எழுவகைத் தீக்ஷை.

௭. வீரவிசேடருக்குச் சூக்குமதனுவிற் செய்யப்படும் பிராணலிங்க எழுவகைத் தீக்ஷை.

௮. வீரநிராபாரருக்குக் காரணதனுவிற்செய்யப்படும்பாவலிங்க எழுவகைத் தீக்ஷை.

௯. அபிஷேகங் கொள்ளுமுறைமை.

௧௦. சிவானந்தத்தினுயர்வும் சைவவருணெறிச்சிறப்பும்.

## நெடுங்கழிநெடில்.

௧. எப்பிறவி நல்லனவென வினுதற்கணின்ற ஒகாரமிரண்டனுள் முன்னையது அர்ச்சனைபுரிந்த சிலம்பியாதியவற்றினுயர்பும், பின்னையது அதுபுரியாத மூடரிழிபும் தோன்றநின்றன. தெரித்தவர் தமையும் வைத்தருள்வோயென இயையும்.

௨. அமைந்து கடந்திடாது இயன்ற யாக்கையெனக் கூட்டுக. இத்திறயாக்கையாதிய வுடையராய்த் தோழமை பூண்ட நம்பியாரூரர் முதலியோர் விரும்பியவாறுசெய்யத் தேவரீரே வலிந்துசெல்லுங் காலத்தும் அவர் அவ்வரியயாக்கையையும் வெறுத்துத் தேவரீரையேநண்ண; யான் இவ்விழிவுடல் நீக்கத்திற்கு அழிவேன் இங்ஙனமாயின் எங்ஙனமுய்வேன் என்பது.

௩. ஐம்புலன் - ஐந்து ஐம்பொறிகள்.

௪. உலகையளந்த திருமாலாதியர் நறுமலர்சாத்தலாதிய ஒவ்வொருதொண்டையே மேற்கொண்டொழுகாநிற்க, அவர் முன் நாணமின்றி அத்தொண்டனைத்தும் ஒருங்குடையதாகிய உமது பூசையைச் செய்கின்றேன் எனதறியாமை என்னே! என்பது. இறைவரையழிப்பான் யாகமியற்றிப் புலியாதியவிடுத்தமைபற்றித் தாருகவனமுனிவரை விலங்கினுங் கடையரென்றார்.

௫. மூக்கிடைவிழிகளேறல் - காட்சி மழுங்கக் கண்சுருங்கல்.

௭. சிவசாதாக்கியமுதலிய ஐந்துசாதாக்கிய தத்துவங்களையும் சதாசிவமூர்த்திமுதலிய ஐந்து தத்துவமூர்த்திகளையும் முறையே உற்றன ஈசானம் சத்தியோசாதம் வாமதேவம் அகோரம் தற்புருஷமென்னும் முகங்களாகிய பிரபாவங்கள் எனக் கொள்க.

௧௦. வங்கையராதியர் சரித்திரங்களை வசவபுராணத்துட்காண்க.

## குறுங்கழிநெடில்.

௧. பொன்செய்வாணிகர் - பொன் வினைபுரியும் வாணிகர். (தட்டார்)பொன் ஈட்டும் வணிகருமாம். என்செய்கு-யாது செய்வேனென்னும் தன்மை யொருமை வினைமுற்று. ஓ வினுப்பொருட்டு.

௨. விட்டிடுமாறு - கடைக்குறைந்தது. ஆறு - தன்மை.

௩. தமவென - தம்முடையனவென.

௬. குருபணிக்கு உடலும், சங்கம பூசைக்குப் பொருளும், சைத்தியானத்திற்கு மனமும், உரியனவாகப்புரிதல் வேண்டுமென்னும் நூற்றுணிபுபற்றி நினக்குறுகூறும் மனமென்றார். இதனை நிரஞ்சனமாலை கஎ-வது செய்யுளினும் உணர்க.

௭. மலர்க்கருள்வதாயின் என் மலர் கல்லினுந்தீதோ என்பது.

௮. தருநீர் உனக்கு வாய்ப்புனலாமோ என இயையும்.

## நிரஞ்சனமாலை.

௨௧. கருவன்று - கருவன்றி. கரு - வித்து. "விச்சதன்றியே விளைவுசெய்குவாய்" என்பதனானும் அறிக. திருவாசகம் திருச்சதகம்.

## சிவதாமமகிமை.

ச. இறந்திடாத் என்பது ஈறுகுன்றாத். (இ,சு.) காணிய கூறிய என்பன செய்யிய வென்னும் வினையெச்சம்.

எ. வெண்மதிமுடி - வினைக்குறிப்புப் பெயர்.

## நேத்ரவிநோதம்.

கண்ணி-சு. வாசனையென்றது நினைவிற்குக்காரணமாயுள்ள பாவனை வாசனையை என்க. தமித்திருந்தது ஒன்று-அறிவைத் தடைசெய்திருந்ததொரு மலினம்.

கக. கழுவேறிகள் - சமணராதியோர்.

கச, கடு. என்பில் உயிராக்கினன் - ஆளுடையபிள்ளையார்.

கஎ, கஅ.எண்ணி இறப்பும் பிறப்பும் கடியப்பிறந்தான் என்க.

உக. கருணைபுரிதலாவது-தம்மைநோக்குதலாதியவற்றால் பாவிகட்குப் பாவவொழிவும், தம்புனிதச்செயல்களை நோக்குதலால் உதாசனர்க்குப் புண்ணியவிருப்பமும், தம்மைவழிபடுதலால் பத்தர்க்கு நல்வினையும் தம்மை நம்புதலால் சீடர்க்கு முத்தியும் உண்டாக்கல்.

உஉ, உக. மூன்றாற்பெருக்கும் இருசமயம்-அறுசமயம்.

உச. இது முதல் தசாங்கம் கூறப்படுகின்றன. இது கைலை மந்தரம் விந்தம் மேருவை இழித்தவாறு.

உடு. வளத்து - வளத்தது.

ஙஉ, முப்பகுதியுயிர் - விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர். மும்மாயை - சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை.

ஙஅ. வரையாமை - எழுதாமை, நீக்காமை. அநுமானித்தல் - காரியத்தைக் கொண்டுகாரணத்தைத்துணிதல்.

ஙகூ. திருக்குறள் ஙகூ.

சுங. மூன்னும்படி வேறிலாமையாவது - இரண்டையும் சமமாகக்காண்டல்.

எ0. மனுவுரை - மந்திரவாக்கியம்.

எக. தன் என்றது சிவஞானபாலையதேசிகரை. புலவர் - தேவர், கவிஞர்.

எஉ. மகிழ, எங அணைய என இயையும்.

எங. தனைமேவு மாசு என மாற்றுக.

எக. பொறிக்குஞ்சரம் - இந்திரியங்களாகிய யானை. "தொண்டரஞ்சகளிறும் மடக்கி" என்புழியும் அஞ்சகளிறென்பது மது; அஞ்சு பூதபெயராய் இந்திரியங்களின் மேனின்றது.

அஉ. கவரி இரட்டி என இயையும்.

கஎ, கஅ. சார்தமருள் - பிறவிக்குக் காரணமான வியரீதவுணர்வு.

க0உ. எம்மை யெமக்கருளாய் என்றது ஆத்மாவிலையவிளக்குவாயென்றபடி.

கக்ச. இக்கண்ணி சிவக்கோலத்தைச் சுட்டிநின்றது.

ககடு. அடியேனும் கஉஎ - காதலானேன் என இயையும்.

ககஎ. வில் நியாஸம் - வில்லைத்தொடுதல்; பின் பகையின்மையின் நெகிழ்க் கண்ணைத் துறந்தனரென்பது.

ககஅ. கேவலம் - அறிவின்மறைப்பு.

கஉச. இவர்க்ரம் பிரமகபாலத்தைக் கழுத்துப்போற் றங்காமை குறிப்பித்தது.

கடுச. தொகைபெறு - செய்யூ என்னும் வாய்பாட்டது.

கடுக. கம்பர் - கவிக்கம்பர்.

கஙஎ. நீ துணையல்லவென்று நின்னை நீங்கினால் என்க.

கஅச. சீர்மலிந்த கஅஎ - என்னும் என இயையும்.

கஅக. தன் என்றது மணிமுத்தாநதியை.

கஅஎ. செய்த்தாமம் - வயலிடம்.

கஅஅ. சுவை - உப்பு.

கஅகூ, ககூ0. எருதற்கு எளியவழியாக உயர்த்த உப்புக்குவியல் என்க.

ககூஉ. பூ - இலேஷை. சேடன் பணங்காட்டல்-பாதலங்காறும் பதிந்திருத்தல்.

ககூஙு. வேளாளரும் கங்காபுத்திரராகலின் முருகக்கடவுளை சகோதரரென்றார். கங்கை விடுப்ப என இயையும். ஆண்டு வேளாளரின் மிகுதிகுறித்தவாறு.

ககூஎ. திருக்குறள், கடுகூஅ.

உ00. சேயூர் - முருகக்கடவுள் தலம்.

உ0கூ. இறைவன் நாற்பூதம் எனப் பிரிக்க.

உ0கக. அவன் என்றது நியாயனை. சேரநண்ணுரேல் என இயையும்.

உஉக. தந்திதருபச்சை - யானையாற் கொணர்ந்த மரகதப்பச்சைக்கடகம். இச்சரிதம் சிவப்பிரகாசசுவாமிகள் வரலாற்றால் உணர்க.

உசஉ. ஒரு பூதருமில்லாதுற்ற—ஒருயிரும் காட்சியிற்படா தொடுங்கியுள்ள

## முத்தப்பருவம்.

௬. பிலாதி - கம்பை.

---

## அம்புலிப்பருவம்.

எ. கின்னிறகாமன் என்றது - சசிவன்னனை.

---

## சிவஞானபாலையசுவாமிகள் கலம்பகம்.

சசு. இப்பிரபந்தம் ஆசிரியர், அயிக்கமுற்றபின்னர் அருளிச்செய்ததாகலின் "நங்கண்களிப்ப நண்ணுமாயின் யாம் விளையறிகுதும்" என்று ஆற்றாமையால் விதந்துரைக்கப்பட்டது.

---

## இட்டலிங்கவகவல்.

வரி-௬. பெரியோன்றானும் திசைமுகத்தொருவனும் காண்டல்செல்லாதென இயையும்.

சச. கடிஞை - பிக்ஷாபாத்திரம்.

அஉ. அருர்மூன்று - ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்பன. அவைமுறையே சடத்தொடுகூடிய சேதனம்வாயிலாக வருவதும், பஞ்சபூதம் வாயிலாக வருவதும், ஒருவாயிலானன்றித் தெய்வந்தானே காரணமாக வருவதுமாகிய துன்பங்கள்.

அஅ. நோக்கிய ஒளிசிறந்தன்றே என இயையும். நோக்கிய - நோக்க. ஒளிசிறந்தன்று - ஞானம் மிகுந்தது.

௧௦௦. ஒழிவின்றிருத்தலாவது - தூலதனுவில் இட்டலிங்கமாகவும், சூக்குமதனுவில் பிராணலிங்கமாகவும், காரணதனுவில் பாவலிங்கமாகவும், அகலாதமர்ந்திருத்தல். எங்ஙனமிருந்தனரெனின், காசி முதலிய பல்பெரும்பதிகளனைத்திலும் கண்டோர்க்கு வினைத்தொடர்பகல வீற்றிருந்தெனவே இருந்தனர் என இறுதியடிகளோடுகூட்டி முடிக்குக. இன்று - இன்றி.

௧௧உ. பெருங்காய் வீழ்தர வாளையாயும் என இயையும்.

௧௬உ. களமர்வீழ வராலுகளும் என இயையும்.

## சிவப்பிரகாசசுவாமிகள்

## பிரபந்தத்திரட்டுக்குறிப்புரை

## முற்றிற்று.

